உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# கந்தபுராணச்சுருக்கம்.

---

திருக்கைலாசபரம்பரைத் தருமபுரவாதீனத்துச்

சம்பந்தசரணாலயசுவாமிகள்

அருளிச்செய்தது.

---

இது

யாழ்ப்பாணத்து நல்லூர்

**ஆறுமுகநாவலரவர்கள்**

சிதம்பரசைவப்பிரகாசவித்தியாசாலைத்

தருமபரிபாலகர்களால்

சென்னபட்டணம்

வித்தியாநுபாலனயந்திரசாலையில்

அச்சிற்பதிப்பிக்கப்பட்டது.

மூன்றாம் பதிப்பு.

ஆங்கிரச௵ ஐப்பசி௴.

கணபதி துணை.

# சம்பந்தசரணாலயசுவாமிகள்

## சரித்திரச்சுருக்கம்.

திருக்கைலாச பரம்பரையில் விளங்காநின்ற தருமபுரவாதீனத்திலே, ஆறுவது குருமூர்த்திகளாயெழுந்தருளியிருந்த திருஞானசம்பந்தசுவாமிகள் காலத்திலே, அவருடைய மாணாக்கர்களுள்ளே சிரேட்டராகிய சம்பந்தசரணாலயசுவாமிகள் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் கல்வியறிவொழுக்கங்களானும், குருலிங்கசங்கம பத்தியானும் மிகச்சிறந்தவர். தினந்தோறுந் தமக்குரிய நியதிகளை முடித்துக்கொண்டு நிஷ்டையிலிருப்பவர். இதுநிற்க.

கன்னடம், தெலுங்கு, திராவிடமுதலிய பாஷைகளில் அதிசமர்த்தரும், சுப்பிரமணியக்கடவுளிடத்துமிகுந்த பத்தியை யுடையரும், மைசூர் அரசருமாகிய கர்த்தர் என்பவர் சாஸ்திரவிஷயமாயுள்ள சிலசந்தேகங்களை வினவும்பொருட்டுப் பற்பல இடங்களினுள்ள வித்துவான்களை அனுப்பும்படி அரசர்கட்கும் மடாதிபதிகட்கும் நிருபங்கள் விடுத்தார். இத்தருமபுரவாதீனத்திற்கும் அந்நிருபம் வந்தது. அதனைக்கண்டு எழுந்தருளிய மஹாஞானியாகிய சம்பந்தசரணாலயசுவாமிகள் மைசூரையடை

ந்து, அரசர்சமுகத்தில் எழுந்தருளும்பொழுது, அவ்வரசர் ஏனைவித்துவான்களினும் பார்க்க இவரிடத்து ஆச்சிரமத்திற்கு ஏற்ற காலோய்ந்த நடை உடை நிறம் குறி முதலியவை இருந்தபடியைக் கண்டு, தம்மருகிருந்தாரை நோக்கி, "இவர் ஒரு அண்டங்காக்கையோ" என்றார். அதுகேட்ட சுவாமிகள் அவர் சமீபத்தை அடைந்து, "அது நானல்ல" என்று சொல்லி அதனால் அவருக்குண்டாகிய கோபத்தைக்கண்டு, மீட்டும் அவரை நோக்கி, "மகாராசாவே நான் சொல்லியதை ஏதோ விகற்பமாய் நினைத்தீர்போலும், அண்டத்தைக் காவல்செய்யுஞ் சக்தி உமக்கே அன்றி எனக்கு ஏது? ஆதலின் அவ்வாறு கூறினேன்" என்றார். உடனே அவர் அகமிகமகிழ்ந்து, அவரைத் தம் அருகிருத்தி, பற்பல வித்துவான்களையும் நோக்கி, தமது வினாக்களைநிகழ்த்தி அவைகளுக்கு இச்சுவாமிகள் சொல்லுஞ் சமாதானமே தமது புத்தியில் விசேஷமாய்த் தோன்றக்கண்டு, அவரொழிந்த வித்துவான்களை அவரவர் தகுதிக்கேற்ப உபசரித்தனுப்பினர்.

இந்தச்சுவாமிகள் அவ்வரசருடைய அநுமதியின்படி அவ்விடத்தில் வசிக்கும்போது அவராலனுப்பப்படும் பதார்த்தங்களைப் பிறர்கொள்ளத் தாம் அற்பமேனும் உபயோகியாது மாதுகரிபிக்ஷை பண்ணிக்கொண்டு, தம்மை அடைந்த அன்பர்கட்குக் கல்வி யறிவொழுக்கங்களையுஞ் சமயத்தையும் போதித்துவந்தனர். அதனையுணர்ந்த அரசர் "எங்ஙனமாயினும் இம்மகாநுபாவர் எமது அன்னத்தைப் புசிக்கும்படி செய்யவேண்டும்" என்று எண்ணி, ஒருநாள் அவர் பிக்ஷையேற்

கும் வீடுகடோறுந் தமது பதார்த்தங்களை அனுப்பி அவருக்குத் திருவமுது செய்வித்தனர்.

பின்பு ஒருநாள், அவ்வரசர் புலவர் திலகராகிய சுவாமிகளை நோக்கி, "சுவாமீ, கச்சியப்பசிவாசாரிய சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய கடல்போற் பரந்து கிடக்குங் கந்தபுராணத்தை யாவரும் எளிதின் வாசித்து உணரும் பொருட்டுச் சுருக்கிச் செய்து தரவேண்டும்" என்று கேட்க; சுவாமிகள் அவ்வாறே ஒரு சுபதினத்திலே பாடும்படி ஆரம்பித்து அற்புத சின்மய அதிமதுர கவியாகிய கந்தபுராணத்தைக் கந்தபுராணச்சுருக்கம் எனப் பெயர்தந்து பாடிமுடித்து, அவ்வரசர் முதலாயினாரோடுந் திருச்செந்தூரை அடைந்து, முருகக்கடவுளுடைய சந்நிதியிலே அதனை அரங்கேற்றினார்.

அப்பொழுது, அவ்வரசர் மனமிக மகிழ்ந்து, ஒரு பொற்றட்டிலே அனேகமாகிய நவரத்தினங்களை வைத்து, அவருக்குப் பரிசாகக் கொடுக்க: அவர் அதை ஏற்று "இது குருவுக்குப் பிரீதி யாகுக" என்று அப்பால் வைத்தார். மறித்தும், அவ்வாறே கொடுக்க, "இது சிவனுக்குப் பிரீதி யாகுக" என்று அப்பால் வைத்தார். மறித்தும், அவ்வாறே கொடுக்க, "இது அடியார்களுக்குப் பிரீதி யாகுக" என்று அப்பால் வைத்தார். அது கண்ட அரசர் "மும்முறையுந் தமக்கென்று நாங்கொடுத்ததை இவர் இப்படிச் செய்தாரே" என்று நினைக்கும்பொழுது சுவாமிகளுடைய அநுபவந் தெரிந்தாரிற் சிலர் அவ்வரசரை நோக்கி, "மகாராசாவே! இதுவரையில்

இவர் தமக்கென்று நினைத்தது யாதாயினும் உண்டோ" என்றார்கள். அதன் பின் அவ்வரசர் சுவாமிகளை நோக்கி, சுவாமீ! அடியேன் தேவரீரை நகர்வலஞ் செய்வித்துத தரிசிக்க விரும்புகின்றேன் என்று விண்ணப்பஞ் செய்ய, அவர் "தருமபுரவாதீனத்தில் எழுந்தருளியிருக்கும் எனது குருமூர்த்திகளுடைய அநுமதியின்றி அதற்கு நான் இசையமாட்டேன்" என்றார். அது கேட்ட அரசர் அவ்வாறே தமது கருத்தை அவரது ஞானதேசிகருக்குந தெரிவித்து, அவரநுமதிபெற்றுச் சுவாமிகளை நகர்வலஞ்செய்வித்தார்.

பின்பு ஒருநாள் சுவாமிகளை நோக்கித், "தங்கள் குருஸ்தானத்தில் வசிக்கும் பக்தகோடிகள் தினந்தோறுஞ் செய்யுந தொழில் என்னை?" என்று வினவ, அபபொழுது சுவாமிகள் இக்கட்டளைக்கலித்துறையைத் திருவாய்மலர்ந்தருளினர்.

ஆய்வார் பதிபசு பாசத்தி னுண்மையை யாய்ந்தறிந்து
காய்வார் பிரபஞ்ச வாழ்க்கையெல் லாங்கல்வி சேள்வியல்ல
லோய்வார் சிவானந்த வாரியுள் ளேயொன் றிரண்டெறத்
தோய்வார் கமலையுண் ஞானப்ரகா சன்மெய்த் தொண்டர்களே.

இதைக்கேட்டுணர்ந்த அரசர், "ஆண்டு வசிக்கும் அடியார்களுடைய தன்மையே இங்ஙனமாயின், அவ்வடியார்களை அடிமைகொள்ளுங் குருமூர்த்திகளுடைய பெருந்தகைமை எங்ஙனமாகும்" என்று, அத்தியந்த ஆச்சரியம் அடைந்து, அவர் முன்னே குருலிங்க சங்கமங்களுக்கென்று வாங்கி வைத்த நவரத்தினங்களையும் அந்தஸ்தானத்திற்கே அனுப்பினர் அம்மட்டோ! குற்ற

மற்ற இலக்கணங்களையுடைய கோக்களைத் தானஞ்செய்தல் மிக மேலாகிய தருமமாதலால் மிகுந்த சிரத்தையோடு அவ்வாதீனத்திற்கு வருஷந்தோறும் பசுக்களுள் உயர்ந்த கபிலைகளை அனுப்புவதாகிய ஒருவழக்கத்தையும் உண்டாக்கினர். அது நெடுநாள்வரையில் நடந்து வந்தது. அதுநிற்க.

சம்பந்தசரணாலயசுவாமிகள் இப்படியே நெடுங்காலமாக யாத்திரைபண்ணித் தருமபுரத்தை அடைந்து, திரிகாலத்திலும் குருதரிசனஞ் செய்துகொண்டிருந்து, சிலகாலஞ் சென்றபின் சிவபதப்பிராப்தியானார்.

வேலுமயிலுந்துணை.



கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# கந்தபுராணச்சுருக்கம்.

## பாயிரம்.

### கடவுள்வணக்கம்.

விநாயகர் காப்பு.

பொங்கு கந்த புராணச் சுருக்கநூ
லிங்கிசைத்திட வின்பொடு முற்றுவான்
மங்கை பாலகன் மாதங்க மாமுகப்
புங்க வன்றுணைப் பொற்பதம் போற்றுவாம். (௧)

சிவபெருமான்.

சீர்கொண்ட வானந்த மாகி யெங்குஞ்
செறிவாகிப் பரமாகித் திரமதாகி
யேர்கொண்ட கருணைதிரு வுருவமாகி
யெழில்கொண்ட மலைமகளை யிடத்திற் கொண்டோன்
கார்கொண்ட நிறங்கொண்ட முகுந்தனாதிக்
கடவுளர்வந் தடிபரவுங் கடவுள் கொன்றைத்
தார்கொண்ட முடியனவ னடியைத் தாழ்ந்து
தாழாத பெருங்கதியில் வாழா நிற்பாம். (௨)

## சிவசத்தி.

மாற்கரிய செம்பதத்தோன் றேவியாகி
வல்வினையே யெனதாவிக் காவியாகி
மேற்கருணைத் திருவுருவ முடையாளாகி
வித்தகமா யைந்தொழிற்கும் வித்தாய்நின்ற
சேற்கருங்கட் டளவநகைக் களபக்கொங்கைச்
சிற்பரையிங் கெமையாளு முமையாள்செம்பொற்
காற்கமலந் தலைக்கமலம் பொருந்தத்தாங்கிக்
கைக்கமலங் குவித்தருந்துங் கமலந்தீர்வாம். (௩)

## விநாயகக்கடவுள்.

மாவேலை யாலமதை யடக்கித்தன்னுண்
மண்டலக மண்டமெலாம் வளர்ந்துதானோர்
காவேயின் முன்னுதித்து வரசிற்றோன்றிக்
கடம்புபுனை குருந்தினுக்குத் துணையதாகித்
தூவேதந் தலைகாண்டற் கரியதாகித்
துன்பமுறு பிறவியெனுந் துகள்சேர்வெய்யி
லாவேளைத் தன்னடியா நிழலிற்சேர்த்த
வத்திதனைப் பத்திசெய்து முத்திசேர்வாம். (௪)

## சுப்பிரமணியக்கடவுள்.

தேவர்குலப் பெருங்கமல மிடுக்கணை
திமிரமகன் றளியோடு சிறந்துவாழ
மாவலிசே ரவுணர்குலக் குவளைவாடி
மண்ணினிடைச் சுருங்கியிட வந்தபானு
தூவடிவேற் குமரேச னடியனேன்புன்
சொல்லினுக்கு மிரங்கியருள் சுரக்கும்பெம்மான்
பூவடியா மிருபோது மூன்றுபோதும்
பூசைபுரிந் தன்பினொடு புகழ்ந்துவாழ்வாம். (௫)

## வீரவாகுதேவர்.

பொங்குகிரி களிற்றலைமை யோதும்போது
 பொற்புடைய பொற்கிரிமுன் னிற்குமாபோற்
றங்குதிறற் புகழ்வீரர் தம்மையெண்ணிற்
 றானேமுன் னெண்ணவருந் தலைமையாளன்
பங்கமிலா நீடிலங்கை மூடுமல்லின்
 பகைவனவன் பகைவனவன் பகைவனானோன்
மங்கலிலாப் புகழ்வீர வாகுவாய
 வரிசிலைக்கைக் குரிசிலையாம் வணங்கல்செய்வாம். (௬)

## சைவசமயாசாரியர்கள்.

வெங்குருவிற் சற்குருவா யுதித்துக்கூடன்
 மீனவன்மேல் வினைதீர்த்தோன் விரைத்தாள்போற்றி
துங்கமுறு மலைகடலிற் சிலையதான்
 தோணியில்வந் தவன்பாத தூளிபோற்றி
யெங்கள்பிரா னனையிருளிற் பரவைவாசற்
 கேவல்கொண்டோன் பதப்பதும விருதாள்போற்றி
புங்கவர்சூழ் திருவாத வூரில்வந்த
 புண்ணியனா ரிணையடிகள் போற்றிபோற்றி. (௭)

## ஞானப்பிரகாசதேசிகர்.

கடியதிரி மலவிருளைக் கடியஞான
 கரமுதவ வெதிர்செறிந்து கண்டோர்தங்கள்
வடிவுடைய விதயசரோ ருகங்களெல்லா
 மலரவவ மதிநிலவு மழுங்கித்தாழப்
படியடியர் கண்டுதொழ மண்டுசீர்த்திப்
 பரன்கமலை யெழுந்தவருட் பானுவெண்மைப்
பொடியணியு மெழின்ஞானப் பிரகாசன்றன்
 பூங்கமல மலரடிகள் போற்றிபோற்றி. (௮)

### ஞானசம்பந்ததேசிகர்.

சீரணியு நுதலின்விழி மழுமானுகக்
திருந்துமெரி பொருந்துவிடந் தெரிந்திடாமற்
ரூரணியன் பரையாள வவர்போல்வந்து
சைவசிகா மணியெவர்க்குந் தலைவனெனுங்கோன்
காரணியு நெடியபொழிற் கமலைவேந்தன்
கருணைமழை பொழியுமிரு கடைக்கண்ணாளன்
பார்புகழுந் திருஞான சம்பந்தனெந்தை
பரமனிரு சரணமலர் பரவிவாழ்வாம். (௯)

### கச்சியப்பசிவாசாரியர்.

போதமுறு சூதமுனி புகன்றகாந்தப்
புகழ்க்கடலிற் படிந்ததன்கட் பொருளதான
மேதகுவண் புனலருந்தி வையமுய்ய
வெய்யதுயர்ப் பிறவியெனும் வெம்மைதீரத்
தாதவிழ்பூம் பொழிற்காஞ்சிக் குவட்டிலேறிச்
சலதியமு தினைநிகர்செந் தமிழதான
காதன்மழை பொழிந்தவருட் கொண்டலான
கச்சியப்ப னிருபாத முச்சிவைப்பாம். (௧௦)

### நூல்வந்தவழி.

நன்புவி யிடத்துமிக்க நைமிச வனத்துவாழுந்
துன்பில்சீர் முனிவர்கேட்பச் சூதனங் குரைத்தகாந்த
மின்புறு கச்சியப்ப னியம்பினன் றமிழாலன்று
னன்புறு தமிழைப்போற்றி யறிந்தவா சுருக்கிச்சொல்கேன். ()

---

## அவையடக்கம்.

கருக்கடன் முருக்கிமுத்திக் கரைதரு காந்தநூலைச்
சுருக்கவே கல்வியில்லாத் தொண்டனேன் றுணிந்தவாறு
திருக்கில்வான் முழுதுமிங்கோர் செங்கையி லடக்குவேனென்
றுருக்கர மில்லானெண்ணு மூக்கமே போன்றதன்றே. (௧௨)

அத்தமுஞ் சொல்லுஞ்சொல்லு மாதிமா தாநலானு
மெத்திய வனப்புவேலோன் வியன்கதை யுறுதலானும்
பித்தனேன் றனதுபாட்டிற் பிழைகள்வந் திடினுந்தீர்த்திட்
டுத்தமர் கொள்வரென்னு முரத்திணு லுரைக்கலுற்றேன். (கங)

தனக்கிணை தானேயான சம்பந்தன் கமலைவேந்தன்
கனக்கவே யென்பாலன்பாற் கருணைவைத் திடுதலாலே
யுனற்கருங் காந்தந்தன்னை யுரைத்தனன் சுருக்கியல்லா
லெனக்குமிக் கதைக்குநாடி லெத்தனை தூரமாமால். (கச)

பாயிரமுற்றிற்று.

# புராணவரலாறு.

விரிகின்ற கடற்புனலுண் டிருண்டுமின்னி
விண்மூடி வருங்கருமேகக் கொண்மூவீறி
யெரிகின்ற வொளித்தாவ யொளிப்பவோங்கு
மெழினந்தி வரையும்ப ரிம்பர்வாழச்
சொரிகின்ற வெள்ளமிகு பாலிசூழ்ந்த
தொண்டைவள நாட்டுளது தொண்டைச்செவ்வாய்ச்
சரிகின்ற வளைத்தளிர்க்கைம் மடவார்மேவுந்
தடமாட நெடுவீதித் தமிழ்சேர்காஞ்சி. (க)

இன்னபரி சென்னவெழி லன்னமேய
விறையாலு மெவராலு மியம்பவொண்ணு
வந்நகரின் வளர்பெருமை சொன்னுலென்னு
லடங்குமோ வடங்காதா லதன்கண்முன்னுட்
பொன்னவிருந் திருமார்பன் கமடமாகிப்
புரங்கடிந்த கடவுளடி போற்றிவாழ்ந்த

நன்னலஞ்சேர் கச்சபா லயமென்றேது
நாமவா லயமொன்று நண்ணிற்றன்றே. (உ)

அனையசின கரமதனின் மதனைவென்ற
வமலனிரு கமலமல ரடிகள்போற்றிப்
புனையுநறுந் துழாய்மௌலிக் கடவுடந்த
போதனுறு போதுவளர் போதமேவு
முனைவர்பல ரடைந்தவன்செம் பதங்கடாழ்ந்து
முண்டகமேன் முதல்வவொரு முதுசிர்க்கானந்
தனையினிதி யாங்கடவம் புரிந்துவாழச்
சாற்றுகென வனையானித் தன்மைசெய்வான். (௩)

ஒருதருப்பை யெடுத்துவளைத் தவனிமீதி
லுருட்டியிது நின்றவனத் துறைதிரென்ன
வருமுனிவ ரெல்லோரும் பின்னரேக
வதுசென்று துன்றியவோ ரடவியூடே
மருவியவ ணின்றிடவங் கிருந்தாரன்ன
வனநைமி சாரணிய வனமென்றிகப்
பொருவில்புகழ் மாதவரோர் வேள்வியாங்கே
புரிந்தமலம் பொருந்தியினி திருந்தபோது. (௪)

சூதமுனி யீதறிந்து வரலுநேர்போய்த்
தொழுதனரங் கிழுதனலிற் றோய்ந்தாலொப்ப
மேதகுமன் புளமுருக முகமன்கூறி
வீறுதம தாச்சிரம மேவச்சேர்த்திச்
சோதிமணிப் பெரும்பீட மொன்றுநாப்பண்
டுலங்குறவிட் டதன்மீது துகளிலாவம்
மாதவனை யினிதிருத்தி யருத்தியோடு
வல்லையிலர்க் கியமுதல வழங்கினரால். (ரு)

மற்றதுபின் பின்னநெடுஞ் சடிலச்சென்னி
மன்னியமா தவரனையான் மருங்குவைகிப்

பற்றலர்தம் புரமெரிய நகைத்தசெவ்வாய்ப்
 பாலவிழித் தனிக்கடவுள் பாலனான
செற்றநெடுங் கதிர்வேற்கைப் பெரியோன்காதை
 சிறியோமிங் கறியவுரை செய்வாயென்னக்
கொற்றமுனி யதுவினவி விழிகள்வெள்ளங்
 கொள்ளவவ ரோடின்ன கூறலுற்றான். (௬)

ஒன்னலார் சோரிகுடித் தொளிருஞ்செவ்வே
 லொருவனது பெருங்காதை யுரைப்போர்கேட்போர்
முன்னெலாம் புரிந்தவினை யனைத்துந்தீர்த்து
 முத்திதரு மதுகேட்ப முயன்றீர்மன்றோ
பின்னலான் மறைந்தபிடர் முனிவீர்நீவிர்
 பெருங்காத லொடுகேண்மின் பேசுகேனென்
றின்னலா னவைநவைக ளனைவயும்போக்கு
 மேதமில்சீர்ச் சூதமுனி யியம்பலுற்றான். (எ)

முற்காலத் தரன்புகன்ற மறைகள்யாவு
 முதன்முடிவு தடுமாற முனிவர்தேவர்
நற்காருந் தரையிருந்த மாக்களெல்லா
 நல்லறிவு நீங்கிமய னண்ணினரா
யற்காள கண்டனையு மறந்துவீறு
 மறமாற்றி மறமாற்ற வாற்றன்மாயோன்
விற்காமர் நெடும்புருவ வாணிகேள்வன்
 விண்ணவர்சூழ் தரக்கயிலை மேவினரால. (அ)

விண்ணவர்கண் மகுடமுடி தடவுஞ்செந்தாள
 விறனந்தி தேவரொடு விமலன்பால்யா
நண்ணியது புகன்றருள வேண்டுமென்ன
 நம்பனெறி ரடைந்திறைஞ்சி நவிற்றலோடுந்
தண்ணருளெம் பெருமானிங் கவரைவல்லே
 தருதியென மீண்டுநெடுஞ் சார்ங்கபாணிக்

கண்ணன்முத லிமையவரை விடுப்பநாதன்
கழலிருமுது பணிந்தின்பங் கலந்துநின்றார். (கூ)

நின்றுபுகழ் மான்முதல்வா னவரைநோக்கி
நிமலனும தரசபுரி நெறிகளெல்லா
நன்றுபெற நடந்தனவோ வென்னமாயோ
னுதவுன தின்னருளி னடந்தவிந்நா
ளொன்றுமெமக் களித்தருள்வ தொன்றுண்டன்ன
தியம்புவனம் புவிமாந்த ரெவருந்தென்றற்
கன்றுலவுங் குளிர்சோலைக் கயிலைமேய
கடவுணினை மறந்துமறங் கருதினாரால். (க0)

நற்போத மவர்படைத்து நினதுபாத
நணுகும்வகை யருள்சிறிது நல்குவாயென்
றற்போடு மொழிந்திடலு மொழியாச்சீர்த்தி
யருளாள னொருகலையோ டவனிமேனி
பொற்போடு வியாதனென வுதித்துவேதப்
புகழ்க்கடலை நான்குவகை புரிந்தியாருங்
கற்போலுந் திரண்டபுயப் புயலேயின்பக்
கதியடையும் படிபுகறி கடிதின்மாதோ. (கக)

ஓங்குமறை யுணர்ந்துமுளந் தேறுதாரு
முணராரு மையமகன் றுய்யுமாறு
பாங்குறுமொன் பதிற்றிரட்டிப் புராணமுண்டு
பண்டுநா நந்தியொடு பகர்ந்தாமன்னோன்
றாங்குபுகழ் படைத்தசனற் குமரனென்னுந்
தவமேவு முனிதனக்குச் சாற்றினானல்
வாங்குதிரைக் கடலுடுத்த புடவிமீது
மற்றவன்பாற் கேட்டினிது வாழ்தியென்றான். (கஉ)

இப்பணியை யப்பணியும் பணிசேர்சென்னி
யிடைறயருள முடிமேற்கொண் டிறைஞ்சியாங்கே

கைப்பதுமங் குவித்துவிடை கொண்டுநீங்கிக்
கடிதுதனை யிடத்தடைந்து கடைந்தவேற்கட்
டுப்பனைய துவரதர வாணிகொங்கைச்
சுவடுபடும் புயனுதிச் சுரர்கள்யாரு
மொப்பகரம் பதம்புகுத விடுத்துவைகி
யொருகலையோ டிதித்திடவங் குன்னினனால். (௧௬)

புண்டரிகக் கடவுள்வழிப் பராசரப்பேர்ப்
புகழ்மேவு முனிவனிமம் பொழியும்போது
தண்டரளந் திரையிறைக்குங் கங்கைதன்னிற்
றன்னிகர்யோ சனகந்தி தடந்தோடோய
வெண்டரங்கப் புவிபோற்ற வவர்பாற்றோன்றி
வெதரிகமா வனத்திருந்து வேதம்யாவும்
பண்டையுணர் வாலுணர்ந்தி யாருமுய்யப்
படிமிசைமா ணாக்கராற் பரப்பினனால். (௧௭)

ஆங்கதுபின் சனற்குமரன் பாலீரொன்பா
னானபுரா ணங்களுணர்ந் தடியேற்கீந்து
தீங்ககல வனைவோர்க்கு முரைத்தியென்று
செப்பினா னன்னவற்றுட் டிங்கள்வேணிக்
கோங்கலர்மென் முலைப்பாகத் திறைக்கீரைந்து
கொலைத்திகிரிப் படையோற்கு நான்குகோலப்
பூங்கமலத் தவிசிருந்தோற் கிரண்டுசெந்தீப்
புகழ்த்தபனற் கோரொன்றுப் பொலிந்தவன்றே. (௧௮)

புரமூன்று மெரிக்கனிந்தோற் போற்றுஞ்சைவம்
பொருவில்சீர்ப் பவிடியமே பொற்புமிக்க
வரமாரு மார்க்கண்ட மிலிங்கங்காந்தம்
வராகமே வாமனமே மச்சங்கூர்மம்
பிரமாண்ட மிவைகள்சிவ புராணமாயோன்
பெருங்காதை காருடநா ரதமேவிண்டாங்.

கருண்மேவு பாகவத மாகுமென்ப
வயன்காதை பதுமமே பிரமமாமால். (௧௬)

கூறுபிரம கைவர்த்த மிரவிகாதை
கொடுந்தழலின் கதையாக்கி நேயமஃமென்
றூறில்பரன் கதைபத்திற் பத்தர்போற்று
முயர்குமரன் கதைசுருக்கி யுரைத்தாரென்ப
மாறில்புகழ் வதரிகமா வனத்துவைகி
வாதரா யணனுகி மறைகள்யாவும்
வீறுபெற நான்குநிலை புரிந்தவாற்றால்
வியாதனெனும் பெயர்படைத்தோன் வியன்மாணுக்கன். ()

வளங்குலவு மலையரையன் மகளாயம்மை
வளர்ந்தசெயன் முதலாக மன்னுஞ்செவ்வேள்
விளங்குசுர ரரசளித்த கொம்பினோடும்
வேடர்குலக் கொடியோடும் வேழக்கூற்றின்
களங்கமில்செக் கர்த்தவிசி லிருந்ததிறக்
கவின்முனிவன் றொகையாகக் கழறலோடு
முளங்குளிர்ந்து முனிவோர்கள் விரிவாலெங்கட்
குரைத்தருள வேண்டுமென்ன வுரைக்கலுற்றான். (௧௮)

புராணவரலாறு முற்றிற்று.

ஆகூ திருவிருத்தம் - ௯௨.



உ

திருச்சிற்றம்பலம்.

## முதலாவது

# உற்பத்திகாண்டம்.



திருமருவு கயிலைமிசைக் கனகமா ளிகைசேர் மண்டபத்துச் சிறந்தசியப், பொருவிலெழி லணைமீது கணைமீனாட்டப் பூவையொடு புரமெரித்தோன் பொருந்துபோதின், முருகுமலர்க் குழலுமையா ளொருந்துநாதன் முண்டகத்தா ளிணைவணங்கி முன்னா நின்று, குருகுவளைக் குலமொருங்கு கரங்கள்கூப்பிக் குமுதவாய் திறந்திவைய கூறலுற்றாள். (க)

இற்றைவரை வரைவளர்த்த கரத்தோய்நின்னை யெண்ணாத தக்கன்மக ளென்னுநாமம் * பெற்றனன்மே லதுபரிப்ப வெருவினேனப் பெயரகல வருடியெனப் பேசலோடுந், தற்றுபொழி லிமயநெடுஞ் சைலவேந்தன் றன்மகளா யுனைப்பெறுவான் றவஞ்செய்கின்றான், மற்றவன்பால் வளர்ந்திடுதி வந்தியாம்பின் மணத்துமென விடைகொடிம மலையிற்சேர்ந்தாள். (உ)

அங்கொருபூந் தடத்தினிடைக் கமலமீதி லமலநா யகிகுழவி யாகிமேவ, மங்கைதனை யாண்டுதவம் புரிந்துநின்ற மலையரையன் கண்டெடுத்து மகிழ்ந்துவான்றாய், துங்கமனைக் கொடுபோகி மேனையான துணைவிகரத் தளிப்பவவ டொழுதுவாங்கிப், பங்கமற வளர்த்தனளா யாண்டுசெல்லப் பரனையுற வம்மைதவம் பண்ணவெண்ணி. (ங)

---

* தக்கன் மகளென்னுநாமம் - தாக்ஷாயணி.

வென்றியுறு தந்தையொடு மிந்தவாறு விளம்புதலு மலைய ரையன் விளம்புவானீ, யின்றுதவம் புரிந்திடவே பொருதுன் மேனி யிளம்பருவ மிதுதவிர்தி யென்னவன்னை, மன்றலுறு கொன்றைமுடிப் பரமன்காப்பன் மறுத்தறையே லெனவிசை ந்து மாதரோடு, குன்றிலொரு பாங்கர்தவச் சாலையூடு கோதிற வம் புரிந்திருப்பக் குயிற்றினால். (௪)

செல்லாரும் பொழிலிமயத் தரனைச்சேரத் திருந்துதவம் புரிந்துமையா ளிருந்தகாலை, யெல்லாருந் தழனுதற்கட் பெருமா ன்விண்ணோ ரெல்லாரும் பரவவர மீந்தவாற்றால், வில்லாருங் கனகநெடு மாடநீடு வீதிமகேந் திரமூதூர் மீதுவெம்மை, யல்லா ருங் கடுவினைய தகுவர்சூழ வரசுபுரிந் திருஞ்சூர னமர்ந்தா னன்றே. (௫)

சொற்றருமக் காலத்தின் ஞாலத்தின்பாற் றொல்லைமறைப் பொருளினைமுன் சோதிபாங்கர்ப், பெற்றசன காதிமுதன் முனி வர்நால்வர் பெருந்தவங்கள் பலபுரிந்து பின்னுமுன்னும், வெற் றிநெடுங் கயிலையெனுஞ் சைலமேவி, வீறுமெழி னந்திவிட விட ஞ்சேர்கண்டக், கொற்றவன்ற னடிவணங்கி முடிமேற்செங் கைக் கோகனதங் குவித்தினைய கூறலுற்றார். (௬)

அருமறையின் பலபொருடேர்ந் திந்நாள்காறு மடியரேம் புந்திவிரிந் தலைந்தநீண்டுப், பொருவிடையோ யறிவடங்கி யாங் கணுய்யப் புரிந்தருள வேண்டுமெனப் புகறலோடுங், கருமறலி யுரங்கிழித்த பதுமச்செந்தாட் கருணைநெடுங் கடலிருமின் காம ரன்றான், மருளுறுநும் முணர்வொடுங்க வுரைப்பாமென்ன மன்னுமவன் றிருத்தாண்முன் னிருந்தாரன்றே. (௭)

சங்கரன்முன் னவரிருப்ப நந்திதன்னைத் தந்திதனை யுரித்த கரத் தலைவனோக்கிப், புங்கவர்க ளெவர்வரினும் விடுவாயல்லை போர்மதவேள் வரில்விடுதி போதியென்ன, வங்கவனே கினன் முனிவர் மகிழ்ந்துகேட்ப வாகமத்தின் பொருண்மூன்று மாதி

யோத, விங்கெமது புந்திவிரி வொடுங்கஞான மிறைவபுகன்
றருள்வாயென் றியம்பினுரால். (அ)

என்றிடலு நகைத்தருளி யாதுமாங்கே யிசைத்திலனப்
பொருளிருப்ப திவ்வாறென்று, துன்றுநெடுஞ் சடைமுனிவர்க்
குணர்த்துமாற்றுற் றுலங்குமொரு கரமுரத்திற் றேயச்சேர்
த்தி, முன்றகுவர் புரமெரித்த பரமன்ஞான முத்திரையாங் குறி
காட்டி முனிவரேபோ, லொன்றொருநுண் கணப்பொழுதி
யோகமாகி யுறைந்தனனங் கவரருள்பெற் றுய்யுமாறு. (கூ)

பிள்ளைச்சந் திரமவுலிச் சிறுமான்செங்கைப் பெருமானிவ்
வாறிருப்பப் பெருமைசான்ற, வுள்ளத்தன் பினராநற் றவருந்
தத்த முணர்வொடுங்கி ஞானமுணர்ந் துறும்பேரின்ப, வெள்ள
த்துட் படிந்துசெய லொன்றுமின்றி மேவினரோ ரிறைப்போது
விமலற்காய, தள்ளற்றென் டிரையுடுத்த புடவிமாக்கட் கமர்த
மக் கெண்ணிலுக மாயிற்றம்மா. (க0)

விரிபதுமத் திருமருமப் பெருமானுதி விண்ணவர்க்கு மண்
ணவர்க்கும் வேந்தனுகிப், பொருவிலவ ருயிர்க்குயிரா யுணர்வுந
ல்கும் பொருவிடையோ னுமையோடு பொருந்தலின்றி, யருமு
னிவர் பொருட்டாக யோகிபோல வமர்தலா லெவ்வோரு மரி
வைமார்தோண், மருவிமுயங் குதலின்றி யிருந்தார்கஞ்ச மலர்
விதிக்கும் விதிக்குமுறை மாறிற்றன்றே. (கக)

இப்படியிப் படிவானத் திருந்துவாழு மெவ்வுயிரு முறுங
காலத் திருணஞ் சேய்க்குந், துப்பவுணர் பெருந்தகையாஞ் சூரா
ன்செய்யுந் துயரினு லுயர்துறக்கந் துறந்துநீங்கிக், கைப்படுவெங்
குலிசநெடும் படையான்முன்னங் கனவரைக ளிறகறுத்த கடவு
ள்கோல, மைப்பொலியு நயனவயி ராணியோடும் வானவரோ
டும்புவியின் மருவினுனல். (கஉ)

வெள்ளிவரை யடைந்தரனை வணங்குமாறு வேலையலா
திருந்திடலும் வேலைஞ்சங், கொள்ளுமடன் மிடறுடையோன்

குனித்தசெம்பொற் கோதண்ட வேதண்டங் கூடியாங்கே, கள்ளூருதார்ச் சயந்தனொடுங் கடவுளோரைக் காரவுணன் சிறைபுரிந்த கடுஞ்சொற்கேட்டுத், தள்ளுமதற் கரியதுயர் கொண்டுநாதன் றுட்கமல மலர்நினைந்து தவம்புரிந்தான். (கரு)

புரிந்திடலு மிறைதவள விடைமேற் றேன்றிப் பொருவிறவத் தினைத்தனை நீ புந்திதன்னில், விரும்பியதே தெனவறியான் போன்றுகேட்ப வெஞ்சூர்க்காய்ந் தெமையாள வேண்டுமென்னத், திருந்தலனுல் வருந்தலெலாந் தக்கன்வேள்வி சேர்ந்திருந்த தீமையெனச் செப்பிநந்த, மூரந்திகழு மகனொருவ னவுணர்ச்சாடி யுமைப்புரப்பா னெனவருளா லுரைத்துப்போனான். ()

ஆங்கமல னிங்குதலு மமரர்கோமா னுகுலமு மின்பமுங் கொண் டனையவெற்பிற், றங்குபுக ழயிராணி யென்னுநாமத் தன்மனைவி பொன்மனைவி தன்பால்வைத்துத், தேங்கமழுங் கமலநிதிப் பொருட்டின் மன்னுஞ் சென்னிநான் குடையானைச் சேர்ந்துதாழ்ந்து, தீங்குபெறு சூர்புரியுந் துயருநாதன் செப்பியது மவனோடு செப்பினுனல். (கசு)

போயமரர்க் கிறையுரைதத வாறுதேர்ந்து புகுந்தபடி முகுந்தனுக்குப் புகலவெண்ணித், தூயகம லத்திருந்து திருந்துவேதன் சுரர்குழுவு மகவானுஞ் சூழவேகி, மாயனுட னரன்யோகத் திருந்தவாறும் வானவர்க டானவரால் வருந்துமாறு, மேயபல வுங்கூற வரியுமோர்ந்து விதிபதும முகநோக்கி விளம்பலுற்றான்.

எம்பெருமான் முனிவோர்கட் காகயோக மிருந்திடுதெ றவிர்ந்தருளி யிமயவெற்பி, லம்பிகையை மணம்புரிந்தோர் சுதனைநல்க வரன்பான்மா ரனைவிடுகென் றறைதலோடு, மும்பர்பெருங் குழுவோடு மகவானோடு மொளிதருபா ரதிகேள்வ னுவந்துமீண்டு, செம்பதும வகத்தினிதுற் றகத்துவேளைச் சிந்தனைசெய் திடவவனுஞ் சேர்ந்தானன்றே. (கஎ)

வந்தமதன் றனைநோக்கி யேகன்யோகமருவுதல்விட் டுமை யவளை மருவுமாறுன், கந்தமலர் சிந்திவரு வாயென்றோதக் கரங் கொடிரு செவிமூடி யரன்பேரோதி, யந்தமிலா வையனைச் சென் றெய்யவஞ்சி யனேகவித மறுத்துரைய வலரோன்சீறி, யிந்தமொழி மறுத்திடிற்கு ளறைவோமென்ன விசைந்தனனிவ் வாசகமங் கிசைக்கலுற்றான். (கஅ)

மண்டுபவக் கடற்படிய வினைதுபாங்கர் வருஞ்சூளின் மாறு தலின் வாளுலாவுந், துண்டமதிச் சடையோன்பாற் கணைகடு வித் துஞ்சினுநன் றுஞ்சுவருந் தொழிலுமுண்டா, முண்டக வண் டலிசிருந்த முனிவவென்பான் முனியலையா னிறைவ னொடு முரட்போராற்றத், திண்டிறலி னேகுவனென் றியம்பவ ஞ்சேல் செல்கவெனத் தனதுலகஞ் சேர்ந்தான்மன்னோ. (கசு)

இருங்கிள்ளைப் பரித்தென்கா விரதமீதே யிரதியொடு புகு ந்துபடர்ந் திந்துவேணிக், கருங்கண்டன் கயிலைமலை கண்டுவ ல்லே கரஞ்சிரமேற் கூப்புபுதேர் கடிதுநீங்கி, மருங்குள்ள தன துபரி சனங்களாங்கே வைகும்வகை நிறுவிநறு மலர்த்தடஞ்ச சோலை, நெருங்கந்த வரைமீது மாதினோடு நெடுஞ்சிலைவே சோ றியிது நினைந்துசெய்வான். (உ0)

விண்டுவரு ளோங்கணைவே ளனையதான விலங்கலிடை வில ங்காப்புள் விலங்குமோகங், கொண்டிடவெஞ் சரந்தூண்ட நந் திசீறக் கொடுவாளி நெடுவானிற் குழுமிசீறப், கண்டுமத னிமைற ஞ்சவர லென்கொலென்று காரணங்கேட் டணிமேலை வாசற ன்றோ, லண்டர்பிரான் மொழிப்படிபோ கென்னப்போந்தாங் கரனையெதிர் கண்டாங்கே யயர்ந்துவீழ்ந்தான். (உக)

பின்னிரதி தேற்றவெழீஇப் பொருவானிற்பப் பிரமன் முத லோர்மதன்செய் பெற்றிகாண்பா, னன்னகிரிக் கொருபு டைபோய் மருவினார்வே ளங்கணைவிட் டானவைசென் றரன் பான்மேவ, வன்னிவிழி திறப்பமத னிறப்பத்தேவி வருந்து

மது தெரிந்தமரர் வருந்திநாதன், பொன்னடிநின் றேத்துதலு
மியோகநீங்கிப் புந்திதனி னந்திதனைச் சிந்தைசெய்தான். (உஉ)

அண்ணலினைந் திடவறிந்து நந்தியேகி யடிதொழுது நின்
றிடநீ யலரோனாதி, விண்ணவரைத் தருதியெனத் தருதலோ
டும் வேண்டியதே தெனவுமையை விமலநீவேட், டெண்ணில்பு
கழ்க் குமரனைத்தந் தருள்வாயென்ன விளைந்தவரை விடுத்திர
திக் கிமயமாதை, வண்ண மணம் புரிந்துனது கணவனாவி வழங்
குதுமே கெனவிமய வரையிற்சேர்ந்தாள். (உ௩)

இன்னமொழி மொழிந்தருளிப் பின்னரீச னிட்டமுட
னிட்டையனுட் டித்துவாழ, மென்னவுரைத் தருண்மேவுஞ்
சனகனாதி யிருந்தவரா யிருந்தவர்க ளேகவோதிக், கன்னிதவங்
காணமுது மறையோன் போலக்கௌரிபா லுறவெழுந்து கரங்
கள்கூப்பி, யன்னவளின் றிடுதலுமோர் தவிசின்மேவி யருந்த
வநீ புரிந்திடலே தறைதியென்றான். (உ௪)

என்றிடலும் விசையையுமை பூரனைச்சேர்தற் கிச்சித்தா
ளெனப்பரனை யிகழ்ந்துகூற, நின்றவுமை சினம்புரிந்து போதி
போதி நீதியிலா வேதியநீ யென்னவுன்னை, யின்றுமணந் திட
வணைந்தே னென்றுகூற விடர்மூழ்கி யிணையறுதா ளிணைக
ளேவக், குன்றினொரு புடைபோக விடையின்மீது குழகனா
யெதிர்காட்சி கொடுத்தா னன்றே. (உ௫)

நாயகனும் பரம்பரனை யெதிர்கண்டம்மை நாணமொடு
பணிந்துகர நளினங்கூப்பிப், பேயனேயே னுனையறியா துரை
த்தவெஞ்சொற் பிழைபொறுக்க வேண்டுமெனப் பேசலோடுந்,
தூயநதிச் சடைக்கடவு ளவைகளெம்மைத் துதித்தனவாக் கொ
ண்டோநீ சோரேலுன்னை, நேயமொடு நாளைமணம் புரியச்சே
ர்து நீயரிய தவம்புரித னீங்குகென்றான். (உ௬)

பொன்றாங்கு கனகவரை குனித்தோனின்ன புகன்றகலச்
சிலவரித்தீ பொருப்பன் முன்போய், நின்றாங்கு மொழிந்திடலு

மூவகையென்னு நெடுங்கடலி னிடைப்படிந்து நிமலைபால்வந், தென்றுயே வருகவென மனையிற்சேர்த்தா னிறைவனுயர் கயிலை யடைந் திலங்குமோரேழ், பின்றுழ்செஞ் சடைமுனிவர் தம்மை யுன்னப் பிஞ்ஞகன்முன் னடைந்திறைஞ்சல் பெற்றுநின்றுர்.

வேறு.

அன்ன மாதவரை யாதி தெரிந்தே
மன்னு கின்றவிம வான்மக ளாகு
மின்னினைத் தரவி ளுவுதி றென்னப்
பொன்னு லாவுமிம யக்கிரி புக்கார். (உ௮)

மாத வங்கொளிம வானெதிர் கொண்டே
யாத னங்கண்மிசை யன்பொ டிருத்தி
யேது வெஃகியிவ ணெய்திய தென்ன
வாதி யோதிய தறைந்தன ரன்றே. (உ௯)

கூறுதற் கிசைவு கொண்டது கண்டே
யாறுலாவு சடை யுண்ணலை நண்ணி
மாறிலாத விம வானியை வோதி
வீறு தத்தமிடை மேவின் ரன்றே. (௩0)

ஈது நின்றிட விமக்கிரி மன்னன்
காத லோடமரர் கம்மிய னைக்கொண்
டோதிமக் கிரியி லூர்புனை வித்தே
யாதி முன்புற வணைந்து பணிந்து. (௩௧)

ஒன்று பங்குனியி லுத்திர மாகு
மின்று நன்றுபொழு தென்றிரு மாதை
மன்றல் செய்யவரு வாயென முன்போ
வென்றி தன்னெடுபின் மேவுது மென்றுன். (௩௨)

நார வேணியர னந்தியை நோக்கிச்
சீரு லாவிய சிறப்புடை மன்றற்

கியாரை யுந்தருதி யென்றலும் யாருஞ்
சேர நந்தியிறை சிந்தனை செய்தான். (௧௩)

உன்ன வக்கினி யுருத்திர ராதி
மன்னு ருத்திரர்கள் மான்முதல் விண்ணோர்
துன்னு மாமுனிவர் துன்று கணங்கண்
மின்னுறுங் கயிலை வெற்பிடை வந்தார். (௧௪)

வந்து நந்தியுறு வாயிலி னண்ண
முந்து நந்தியரன் முன்பு விடுப்ப
வெந்தை தாளிணை யிறைஞ்சினர் சூழ்ந்தா
ரந்த வேலையல ரோனிது செய்வான். (௧௫)

ஆசிலா மகுட மாதி கலன்க
ளீச னங்கணிய வின்பொடு நல்க
மாசிலா முதல்வன் மற்றிது கொண்டா
னேச மோடென நெடுங்கரம் வைத்தான். (௧௬)

வைத்து மெய்ப்பணிகள் வண்பணி யாக
நித்த னன்பொடு நினைந்து தரித்தே
மொய்த்தி யாவரு முரண்கொடு சூழ
வித்த கன்றிரு விடைப்புற முற்றான். (௧௭)

ஏற தேறின னெழிற் கயிலாய
வீறு கின்றதிரு வெற்பை யகன்றே
யூறி லும்பரொ டுருத்திரர் சூழ
மாறி லாவிம வரைப்புடை யுற்றான். (௧௮)

வேத மேவுதிரு வீதியி னண்ணிக்
காதன் மாதர்நனி கண்டு மயங்கக்
கோதி லாதவிம வானுறு கோயின்
மீத வங்கொடலை வாயிலில் வந்தான். (௧௯)

ஏங்கு ருவிடை யிழிந்தவ ணிற்பப்
பாங்கு மேனையெதிர் பால்கொடு வந்தே
யோங்கு தாளிணை யுவந்து விளக்கித்
தீங்கி றுணைமொடு சென்றன னன்றே. (௩0)

ஆறுலாவு சடை யண்ண லதற்பி
ஞறில் யாவரு முவந்தயல் சூழ
மாறிலா தவது வைக்கள நண்ணி
வீறு சிங்கவணை மீதுறு போது. (௩௧)

வே று.

தென்பால்வடபா லுயர்ந்திழியத் தெரிந்துதேவர் வருந்துதலாற்
றுன்பாசகன்ற குறுமுனியைத் தொலைபாமலயந் தனிலேவ
முன்பானதுபோற் படியிருப்ப முனிவரமரர் முகமலர்ந்தா
ரன்பாயரம்பையர் கள்சூழ வரன்பால்வந்தா ளம்பிகையே. ()

வந்துபரனைப் பணிந்திடலும் வள்ளறவிசி னிருத்தியென
வெந்தையோடு முமையிருப்ப விமவானடைந்தங்கெழின்மனைவி
யுந்துகரக நீர்வார்ப்ப வுயர்மூறகரிய வொளிப்பதத்தைப்
பந்தவினைக ளறவிளக்கிப் பரிந்துபூசை புரிந்தனனே. (௩௩)

பூசைபுரிந்து நாரிகரம் புனிதன்கரத்திற் கொடுத்தரனுக்
காசைபொருந்து மம்பிகையை யளித்தேனென்ன வறைந்திடலு
மேசிலிமையோர் புகழ்ந்தார்க ளிருவர்கீத மிசைத்தார்கள்[தார்.
மாசில்கணங்கண்முழவறைந்தார்மடவார்பல்லோர்வாழ்த்தெடுத்

அங்கணிணைய நிகழ்ந்ததற்பி னசலவேந்த னசலமுலைத்,
திங்கண்முகத்தம் பிகைகேள்வன் றிருமுன்கணிபால் கொடுவ
ந்தே, யிங்கிரயில வேண்டுமென விவைகொண்டாமென் றனை
தம்மின், மங்குன்மிடற்றோன் கரந்தொடலு மலரோன்சடங்கு
தொடங்கினனே. (௩௫)

மன்றற்சடங்கு முடிந்ததற்பின் மாலுமயனு மகபதியுந்
துன்றுஞ்சுரரு மிமவானுஞ் சுற்றத்தோரு மற்றெவருங்

கொன்றைமுடித்த நெடுவேணிக் குழகன்றனுங் குழகனிட
மென்றும்பிரியா வுமைதாளு மிணங்குமன்பால் வணங்கினரே.()

ஈதுபுரிந்து முற்றுதலு மெமையாளுமையா ளிருந்தாதை
யாதிகரமுன் னெடுஞ்சேட மனைவர்தமக்கு மளித்தனனப்
போதிவிரதி வந்தெந்தாய் போர்வேடன்னை யளித்தியெனச்
சோதிமதனை நினைந்திடலுஞ் சுரர்கள்வெருவத் தோன்றினனால்.

மருவாரிதழி மதிபொதிந்து வளர்செஞ்சடில வானவனத்
திருமாலளித்த மலர்ப்பகழிச் சிலையான்வதனந் தெரிந்தருளி
யுருவாயிரதிக் கிருத்தியரோவொழிந்தோர்க்கெல்லாமுருவல்லா
தருவாயிருந்துன் னரசுபுரி கென்றேயவளோ டவன்விடுத்தான்.

கன்னற்சிலைவே டனைவிடுத்துக் கௌரியோடும் விடையேறி
மின்னுங்கயிலை யடைந்தெவர்க்கும் விடையையுதவிவிடையையி
துன்னற்கரிய வரியணைமே லுமையோடிருப்ப வுயிரனைத்து[மிங்
மின்னலகல விருங்காம வின்பமேவி யிருந்தனவே. (சுக)

பின்னரொருநா ளிமுதலாம் பெருஞ்சீரிமையோர் மேரு
வின்பான், மன்னியிருந்தே யெமைவருத்தும் வலியசூரன் வலி
கெடுப்ப, வன்னநடைமா தினைமணந்து மரனீந்திலன்மைந் தனை
யெனவே, யுன்னிக்கயிலைப் பரம்பரனே ருற்றுவேண்ட நச்
சினரால். (ருo)

வேளையெரித்த விழியாளன் வேளையறிந்து மீளுதற்கு
நாளுமுலவுகாலைவிட நந்திதனைக்கண் டஞ்சியது
மீளவரலுங் கயிலைதனில் விண்ணோரடைந்து நந்திவிட
வாளும்பரனைத் தொழுதேத்த வரனிங்கேது வேண்டுமென. ()

சற்றுந்தகவில் கொடுஞ்சூரன் றன்னாலிந்நா ளின்னன்மிக,
வுற்றுவருந்தித் திரிந்திளைத்தோ முன்னைப்போல வொருசுதனை,
வெற்றிபொருந்த வளித்தெமது விழுமந்தரப்ப வேண்டுமென,

வற்றுன்றியசீர்க் களப்பெருமா னறுமாமுகங்கொண் டாங்கி ருந்தான். (ருஉ)

வேறு.

செம்மைகொளாறு முகத்தொடிருந்தே தீவிழியாறினு மா றுபுலிங்கம், வெம்மையொடுந்தர வங்கவைசென்று வீறுலகத் தும் விரிந்திடவஞ்சிப், பொம்மறருங்கவி னம்மையெழுந்து புல ம்புசிலம்பு பொலன்கழன்மோத, விம்மெனவோடி யிருக்கை புகுந்தா ளெங்கணுமாகி யிரிந்தனர்விண்ணோர். (ருங)

ஓடியவிண்ணவர் கூடினர்வந்தே யுந்தியதானவ ரானவர் தம்மைச், சாடியவிங்கொரு மைந்தனையெந்தாய் தந்தருளென் றுனை வந்தனைசெய்ய, வீடுறுவெம்மைகொ ளங்கியளித்தா யெங் ஙனமுய்வதி யாமெனவோதப், பீடுறுமோர்முக மாகியிருந்து பெருந்தழன்முன்பு வரும்படிமுன்ன. (ருச)

அன்னிலைதன்னின் விரிந்திடுசெந்தீ யாறுபெரும்பொறி யாகியரன்றன், முன்னுறவந்திட வண்ணறெரிந்தே மொய்ம்பு ளதேயுவை வாயுவைநோக்கி மன்னியவிப்பொறி தன்னையெடு த்தே மங்கலில்கங்கையுள் வைத்திடுமென்றே, யின்னவில்சத் திகொ டுத்திடமாறி யெடுத்துயர்கங்கை யடுத்ததில்வைப்ப. ()

மங்கலில்கங்கையு மப்பொறிதன்னை வண்ணமுறுஞ்சர வணமிசைவைப்பப், பொங்கெழிலையிரு திக்கினுமான்முற் புங் கவர்நின்று புரந்தனரப்போ, தங்கதிலாறு முகத்தொடுமீரா றத்தமொடுங்கம லத்தினிடத்திற், சங்கரனேமுரு கேசனென ச்சீர் தங்கவிருந்திட வண்டர்கள்கண்டார். (ருரு)

பன்னிருமொய்ம்பு நெடுந்தகைதன்னைப் பாலதருத்தி வள ர்த்திடமார்பிற், பொன்னையிருத்திய பச்சுருவத்துப் புங்கவன் முற்படு புங்கவரெல்லா, மின்னறுமீனை விடுத்ததுகண்டே வீறியவாறுசி ருரெனமேவ, வன்னமடந்தைய ரன்னமுலாவு மன்னதடத்தி லடைந்துபுரந்தார். (ருஎ)

ஓதிதுநின்றிட முன்னரெழுந்தே போடியசங்கரி பின்புதிரும்பிச், சோதியிடத்தி லடைந்துமடங்கல் சுமந்திடுகின்ற துலங்கணைமேவக், கோதில்சிலம்பது டைந்ததின்முன்வீழ் கொன்னவமாமணி யன்னவள்சாயை, யேய்தலுமொன்பது மங்கையராகி யெந்தைவிளித்திட வின்பொடுவந்தார். (ருஅ)

வித்தகமங்கைய ரெம்பெருமானை விருப்பொடுகண்டு கருப்பமதாகச், சத்திசினந்து கருப்பயவாதே தாங்குமினென்றிடவெங்கினராங்கே, மெத்தியமேனி வியர்ப்பிலிலக்க வீரருதித்தன ராரியைசொல்லா, துத்தமமாதர்கள் பின்பொருநாளிலொன்பதுமைந்தரை யன்பொடுதந்தார். (ருகூ)

மாசறுமன்னவர் தம்பெயர்வீர வாகுவெனுந்திரு வள்ளல்வளைக்கைக், கேசவனும்பர் புகழ்ந்திடுவீர கேசரிவீர மகேந்திரனென்போன், வீசுபுகழ்ப்பெறு வீரமகேசன் வீரபுரந்தரன் வீரவரக்க, ருசறுவீரதிவாகரன்வீரராந்தகன்வீர மடைந்திடுதீரன்.

மற்றவர்தங்களை யாதிதெரிந்தெம் மைந்தர்களென்றுமைமாதொடுகூறி, நற்றிறல்கொண்ட் விலக்கர்களோடு நந்திருமைந்தன தேவல்புரிந்தே, யுற்றிடுவ்ரென வோதுபுமாதோ டிந்துவிடைப்புற மொல்லைபுகுந்தே, யற்றமறுஞ்சர வணமதடைந்தா ருசறுவானவ ரானவர்சூழ. (சுக)

மாசிலிமக்கிரி யின்புடைதன்னின் மன்னுசெழுஞ்சர வணமுனமெய்தத், தேசுறுமன்னதில் வைகியசெவ்வேள் சிற்பரனுரிசெறிந்ததுகண்டான், பாசமகற்றர னம்பிகையோடுன் பாலகனைக்கொடு வாவெனவோத, வாசறுபூவி லிழிந்துநடந்தே யாறுருமைந்தனை யம்மையெடுத்தாள். (சுஉ)

அம்மையெடுத்துழி யாறுருமைந்த னுறுமுகங்களு மாறிருகையுஞ், செம்மைபொருந்தொரு மேனியுமாகச் செப்பினையொத்த திருத்தனநின்று, பொம்மலுடன்சொரி பாலதருத்திப்

வேறு.

மற்றதனை நாரதனு மாமுனிகண் டண்டர்குரு
வுற்றுழிச்சென் றோதுதலு மும்பர்கடம் வாழ்வெல்லா
மிற்றதுகொ லெனவேங்கி யெழுந்துகுக னிடத்தடைந்து
பொற்றிருத்தா ளிணைதொழுது புகழ்ந்தினைய புகல்கின்றான். ()

அத்தனினை யறியாம லமர்புரிந்த வண்டர்கடம்
மெத்துபிழை பொறுத்தெழுப்ப வேண்டுமென வெண்மைநிறத
தத்தியையு மத்தியின்மே லரசையுமற் றனைவரையும்
வித்தகனங் கெழுப்புதலும் விழுந்தார்க ளெழுந்தார்கள். (௭௬)

உஞ்செழுந்த விமையோர்க ளுயர்குகனென் றுணராதே
வெஞ்சமராற் றினமெனவே மிகநடுங்கி யவனடிதாழ்ந்
தஞ்சலிசெய் தேத்துதலு மஞ்சலிரென் றருள்கூர்ந்து
குஞ்சரமா முகற்கிளைய குமரவேள் கூறுவான். (௭௭)

சேயெனமுன் பெமைக்கருதிச் செருப்புரிந்தீ ரினியெமது
தூயவிறல் காணுமெனத் தொல்லுலக மண்டமுயி
ராயவெலாந் தனதுருவே யல்லாலே றில்லையென
நேயவொரு வடிவு * கொடு நின்றனெம் பெருமானே. (௭௮)

அன்பொடுமெற் புகத்தோடு மமரரெல்லாந் தொழுதேத்தக்
கொன்பொலிமுன் னுருவாகிக் குமரவே ணின்றிடலு
மின்பொடுநீ விளையாட லிவ்விடைவே றற்றவெலா
முன்பெனவைத் தருடியென முகிலூர்தி வேண்டினனால். (௭௯)

மகவேந்தன் வேண்டவுமை மகவேந்த றம்பொருட்டான்
மிகவேவே றுற்றவெலாம் வேறின்றி முன்னுளவாந்
தகவேய்க வெனவெ யுஞ் சார்ந்தனவப் படிநவிரப் †
பகைவேலோன் குகன்றாள்கள் பணிந்தினைய பகர்கின்றான். ()

* இவ்வடிவு - விசுவரூபம். † நவிரம் - மலை.

இங்குநினை யருச்சிக்க வேண்டுமெனு விசைந்தருளிப்
பொங்குகயி லைக்கொருசார் பொருப்பினிடைவிருப்பொடுபோ
யங்கமரர் பூசனைகொண் டருங்கயிலை மருங்கடைந்தான்
றங்குபுகழ்ப் புலவருமத் தனிவரையைத் தணைந்தனரால். (௮௧)

வீசுபுக ழாறுமுக வித்தகனை யும்பரெல்லாம்
பூசைபுரிந் திடலாலே பொற்புறுமவ் வெற்பதுதான்
காசின்முரு கற்கிடமாய்க் கந்தவெற்பென் றொருநாமம்
பேசும்வகை பெற்றதினிப் பெருந்தகரே றியதிசைப்பாம். (௮௨)

நாடுபுகழ் நாடுதனி ஞரதன்செய் வேள்வியின்மாட்
டாடுபிறந் துயிர்கடமை யழித்திடலு மம்மகத்திற்
கூடுமுனி வருஞ்சுரருங் கோதிலரு நாரதனும்
பீடுடைய கயிலையெனும் பிறங்கன்மிசை யுற்றனரால். (௮௩)

உற்றபொழு திலக்கமுட னென்பதுவீ ரருஞ்சூழ
வெற்றிபுனை யருட்குமர வேளிருந்த படிநோக்கி
மற்றிவனங் குறைமுடிக்க வல்லவனென் றெல்லோரு
நற்றிருத்தா ளிணைவணங்க நம்பெருமா னவின்றருள்வான். ()

நொந்துணைந்தீர் புகுந்தபடி நுவன்றிடுதி ரென்றருளச்
சிந்தைமகிழ்ந் தொருவேள்வி செய்யவொரு செச்சையதில்
வந்தெமையிங் கடநினைய மகந்தணந்து வந்தனமவ்
வெந்தகர்மண் ணுயிர்களொடு விண்ணுயிர்கொன் றுலவியதே.()

வெய்யவத னடலடக்கி வேள்விமுடித் தடியேங்க
ளுய்யவளித் தருளெனவே யுயர்வீர வாகுவைப்பார்த்
தையவது தனைப்பிடித்திங் கணைதியென வவனேகிக்
கையில்விறற் றகர்பிடித்துக் கந்தனிடை வந்தனனே. (௮௬)

அத்தகரைப் பரியாக்கொண் டவர்வேள்வி செயவிடுத்து
வித்தகரு முருகேசன் விளையாடி யுறுநாளிற்

றத்தைமொழிக் கலைமாது தலைவனுயர் கயிலையடைந்
தத்தனடி பணிந்துபுறத் தணிவாயி லிடையடைந்தான் (௩௭)

ஆலயத்தின் முன்பிருந்த வணிமணிக்கோ புரத்தலத்திற்
கோலமுட னிருந்தருளுங் குமரவேள் கண்டருளி
ஞாலமளித் திடுவோனை நம்முன்வரு கெனவேவிச
சீலமுறப் பணிந்திடுதல் செய்யாமற் பரவுதலும். (௩௮)

ஏதுபுரி வாயென்ன யான்படைப்பே னெனவருமோ
வேதமென வருமென்ன வியனிருக்கு விளம்பென்ன
வாதியினிற் குடிலையெடுத் தறைகுதலு மதன்பொருளை
யோதியபின் றேதெனவே யோதிறு னுமைபாலன. (௩௯)

மனனுகுடிலைப்பொருளை யறியாமன் மயங்குதலுங்
கொன்னுடைய நரசிங்கக் குட்டிதலைக் குட்டியுதைத
தின்னலுறக் கந்தவெற்பிற் சிறையிடுவித் ததிலெங
யன்னநடை யுமைபால னவிகள்பன் னட்படைத்தான (௪0)

அஙகதுபின் னொருநாளி லண்டரொடு முனிவரொடுஞ்
செங்கண்மால் கயிலைநெடுஞ் சிலம்படைந்து நந்திவிடச்
சங்கரனைப் பணிந்தயனைச் சண்முகத்தோ னிட்டசிறை
நங்கள்பிரான் றவிர்த்தியென நந்தியொடு நவின்றருளவா ()

வென்றியுறு குமரனிடை மேவியாம் விடச்சொன்றே
மென்றுவிதி சிறைவிடுவித் திங்கணைவா யெனவெதிர்போட
நின்றிதனைப் புகன்றிடலு நின்றிடிலிங் குன்றனையு
மின்றுசிறை படுத்திடுவே னென்றிடமீண் டிறைக்குரைததான

இந்தமொழி கேட்டுநகைத் தேறேறிக் குமரனுறு
கந்தமலைப் புகுநதிடலுங் கழல்பணிந்தென் வந்ததெனை
வந்தணனை விடுத்திடென வதுசெய்யே னெனச்சினம்போ
லந்தமிலா னேதுதலு மயன்றனைமுன் புறவுய்த்தான். (௪௩)

அந்தணனுக் கருள்புரிந்தே யறுமுகனைக் கவானிடைவைத்
தந்தகுடி லைப்பொருணீ யுரைத்தியென வுரைத்ததுகேட்
டெந்தைமகிழ்ந் தருங்கயிலை யெய்தினான் குறுமுனிக்குச்
சுந்தரமு லப்பொருளைச் சொல்லினான் குமரேசன். (கச)

வேறு.

அணியார் முருகேசன் வளர்ந்ததடத் தமுதக் கொடிசா
தரியென்றிருவோர், தணியா நசையிற் குகனைத் தழுவத் தவமு
றறது கண்டவர் தங்கணுறப், பணியா வெதிர்நிற்ப விரும்பிய
தென் பகாலீரென வெம்மை மணத்தியெனப், பிணியானை தறு
தெதனை யாளுமருட் பெருமா னவரோடிது பேசுவனால். (கரு)

பேரன்பு பொருந்திய நுங்கடமைப் பின்மன் றலியற்றுது
மவ்வளவுஞ், சீரிந்திரன் வேடர்கள் பான்மகவாய்ச் சென்றே
யிருமென்றரு ளோடுவிடுத், தாருந் தொழுகந்த விலங்கலில்வந்
தணிசேர் கயிலாய மடைந்தரனே, டேருந் துமையாளை வணங்
கியவர்க் கிடையாக விருந்தன னெம்பெருமான். (கசு)

அப்போதினி லண்டர்க ளிந்திரன்மா லயன்மா கயிலாய
மடைந்திடலும், துப்பா ரருணந்தி தடுத்துவிடத் தோகைக்
கொருபாகனை யன்பொடுகண், டப்போது மிடுக்கண் விளைத
திடுசூ ரன்போன் புரிதுன்ப மிசைத்திடலு, மெய்ப்பார் குக
னே டவுணன் றனைநீ வென்றே வருகென்று விளம்பினனே. ()

அப்பான்மை புரிந்திடு வேனெனவே யடல்சேர் பதினொ
ன்றெ னுருத்திரரை, மெய்ப்பார் பதினோர்படை யாவுருவி
மேவொன்று குகன்கர மீதுகொடுத், தொப்பா னிலாத விலக்
கர்களோ டொன்பா னெனுமுத்தமர் கைத்தலமேற்,றுப்பார்பல
வெம்படை யங்கருளித் துணையாக வுறும்படி சொற்றனனே. ()

இத்தன்மை நிகழ்ந்தபி னூறுடனே யெட்டாகியபூத விரா
சாதனைமச், சுத்தன் பரிவோடு தெரிந்தருளித் தொல்பூத விரா
யிர வெள்ளமுட, னத்தம் பதினொன்றுட னொன்றுடையா னட

ல்சேர் படையாவுறு மென்றருளி, மெத்துந் திறல்கொண் டிடு
மோரிரதம் வேலோனுறநல் கினன்வித்தகனே. (கூகூ)

இவ்வாறு கொடுத்து மதிச்சடையோ னேகென்ன வலங்
கொடிறைஞ்சுதலுஞ், செவ்வா னுரமீதி லணைத்தருளிச் சீர்தங்
கியநாரி திருக்கரமேன், மைவாழ் வுறுகண்ட னளித்தருள மாக
ன்பில் வயிற்றி லணைத்திமையோ, ருய்வா னவுணப்படை முற்
றுமழித் துறுவா யிவணென்ன வுரைத்தனளால். (க00)

ஈதம்மை யிசைத்திட லுந்தொழுதே யிருவோரையு மன்
புடனே விடைகொண், டேதும் புகழ்வேல னகன்றுயர்தே
ருற்றென்பதுபேரு மிலக்கர்களு, மேதந் தவிர்சாரத மன்னவரு
மிமையோரு மிராயிர வெள்ளமெனும், பூதங்களு மெங்கணு
மங்கணுகிப் புடைசூழ வடைந்தன னம்புவிமேல். (க0க)

வேறு.

பாருலக மீதிலுமை பாலன்வரு போதிற்
றாரக னெனும்பெயர் தரித்ததொரு வெய்யோ
னோரரண மானகிர வுஞ்சகிரி கண்டார்
வீரமுறு வேலனயன் மேவிவரு விண்ணோர். (க0உ)

கண்டனர் வெருண்டனர் கலங்கின ரிடுக்கண்
கொண்டனரு ளங்குலை குலைந்தனர் தளர்ந்தார்
திண்டிறல்கொள் வேலனிரு சேவடி வணங்கி
யண்டர்புகழ் நாரத னறைந்திடுத லுற்றான். (க0ங)

உற்றகிரி யீதுகிர வுஞ்சமிதி னோர்சார்
மற்றுமிக ரற்றதொரு மாயநக ருடே
சுற்றவுணர் சேனையொடு சூரிளவ லாகும்
வெற்றிபுனை தாரகன் விருப்புட னிருப்பான். (க0ச)

வென்றியுற வின்றிவனை வென்றிடுவை யாயின்
வன்றிறல்கொள் சூரனை வதைப்பதெளி தென்னத்

துன்றுகதிர் வேலன்முனி சொன்னவை விறுவிச்
சென்றிவனை தாருயிர் சிதைத்திடுது மென்முன். (௧0௫)

என்றுபி னடற்பெறு மெழிற்புயனே வேலோ
னன்றெருடு தெரிந்திளைய நாகமதி ஞேர்சார்
வென்றியுள மாயநகர் மீதவுண ரோடும்
வன்றிறல்கொ டாரகன் வயத்தொடு வதிந்தான். (௧0௬)

அம்புவி யமூந்தவரு மாயிரநல் வெள்ளத்
தும்பர்தொழு சாரத ருவர்க்கிறையி னேருன்
றம்பியர்க ளோடுமிகு தானவர்க ளோடு
மொய்ம்பொடு செருப்புரிய முந்துபட ரென்முன். (௧0௭)

என்னவிது நன்றெனை விறைஞ்சிமுரு கேசன்
றன்னைவிடை கொண்டினிய தம்பியர்க ளோடு
மின்னுகதிர் வேலனருள் வீறிரத மேறி
மன்னுபடை யோடவுணன் மாயநக ருற்முன். (௧0௮)

ஒற்றறிது சொற்றிட வுணர்ந்தவுணர் மன்னன்
செற்றமிக மூளவொரு தேரின்மிசை யேறித்
துற்றவனி கங்கள்புடை சுற்றவெதி ருற்று
னற்றமறு பூதரு மவர்க்கெதிர் புகுந்தார். (௧0௯)

தெண்டிரை கடுத்தவிரு சேனையு மெதிர்ந்தே
மண்டுபடை சிந்தியமர் வல்லைபுரி போதிற்
சண்டமிகு தானவர்கள் சாரதர்க டம்மா
லொண்டிற விழுந்துதொலை வுற்றனர்க ளன்றே. (௧௧0)

வாரண முகத்தவுணர் மன்னனிது கண்டே
தேரினு மிறங்கியொரு திண்கதை பிடித்தே
பாரிடர்கள் பாரிடை பதைப்புற வதைப்ப
வேருரு மிலக்கரு மெதிர்ந்துசமர் செய்தார். (௧௧௧)

போரினி லெதிர்ந்துழி புழைக்கைகொடு சுற்றி
வாரியி லெறிந்தன னெழுந்துபினும் வந்தா
ரேருலவு கோளரி யெதிர்ந்துகணை நூறுங்
கோரவவு ணன்றன்மகு டத்தைவிழ வெய்தான். (௧௧௨)

சென்னிமுடி வீழ்தலுமொர் திண்கதை யெறிந்தே
பொன்னிரத மீமிசை புகுந்தன னெதிர்ந்தான்
மன்னுகதை பட்டிட மயங்கவது கண்டே
துன்னுவிறல் கொண்டுவளர் தோளின னெதிர்ந்தான். (௧௧௩)

வந்தெதிர் புகுந்ததிறல் வாகுமிசை வெய்யன்
சுந்தர விறற்கொளொரு சூலமது கைத்தா
னுந்தெழு முரத்தினிடை யுற்றிடலு மீசன்
மைந்தனிளை யோன்மிகு வருத்தமொடு நின்றான். (௧௧௪)

மொய்ம்புடைய வாகுமிகு மோகமொடு நின்றேழ்
தம்பிய ரெதிர்ந்துடைவ தானது தெரிந்தே
வெம்பதகன் முன்பணுக வெய்யனு மெதிர்ந்தா
னம்புமழை சிந்தியிரு வோருமமர் செய்தார். (௧௧௫)

பொற்சகடஃ தீதிலுறு புல்லனது போதின்
விற்சமர் புரிந்திவனை வெல்வதரி தென்றே
கற்பொருவு தோளுடைய காளைமிசை செல்ல
விற்குலவு மும்பர்கள் விறற்படைகள் விட்டான். (௧௧௬)

விட்டிடலு மப்படைகள் விட்டருளி வெய்யன்
றொட்டபடை முற்றுமிகு துண்டமது கண்டான்
மட்டிலொரு வங்கொடு வளைந்துசம ராடக்
கட்டழகு கொண்டதொரு காளையிது செய்தான். (௧௧௭)

மெத்துமுரு வத்தவுணன் மீதுவிட வீர
பத்திர னெடும்படை பரித்திடலு மாயக்

கொத்தற வுடன்றனிமை கூடியொ ருபாயஞ்
சித்தமிசை கொண்டுகிர வுஞ்சகிரி சென்று. (௧௧௯)

மற்றதி ஞெளித்திடலும் வாகைபுனை வாகு
சுற்றமொடு தம்பியர்க டோன்முக ஞெளித்த
பொற்றைபுக வாண்டுமயல் பூண்டனர் கிடந்தா
ரற்றமறு சூரிளவ லன்னது தெரிந்தான். (௧௧௰)

தெரிந்துமகிழ் வாகியொரு தேரின்மிசை யேறி
யருந்திறல்கொ டண்டமொ டமர்க்கள மடைந்தே
விரிந்துசெறி பூதர்மிசை வெங்கணைகள் சிந்த
வரிந்தனர்க ளும்பரினு மிம்பரினு மன்னூர். (௧௨௦)

நண்ணினைய கண்டுபுகழ் நாரத னெனும்பேர்ப்
பண்ணவ னிடர்க்கொடு படர்ந்தமரர் செய்த
புண்ணிய முறைந்துழி பொருந்தியடி தாழூஉ
விண்ணவர் மெலிந்திட விளைந்தன விளம்ப. (௧௨௧)

அங்கதை வினவியெமை யாளுடைய செவ்வே
ளிங்கவனை நூறுவ னிறைப்பொழுதி லென்றே
துங்கமுறு பூதர்கடு வன்றியயல் சுற்றச்
செங்குருதி தங்கிய செருக்கள மடைந்தான். (௧௨௨)

ஈடுசெறி பூதரு மிருந்தகுவர் யாருஞ்
சாடுசம ராடமிகு தானவ ருடைந்தே
யோடவது கண்டன னுருத்தவுணர் மன்ன
னீடிய கரத்துறு நெடுஞ்சிலை வளைத்தான். (௧௨௩)

வெங்கணை களும்பல வியன்படையு நேரே
யங்கணை கணக்குழுவி னங்கமுற வுந்திக்
கங்கைமுழு யானுதவு கந்தனெதிர் வந்தே
சங்கையில் பவங்குலவு தாரக னுரைப்பான். (௧௨௪)

மேதகு மரிக்குமலர் மீதிலய னுக்கு
மாதவள வும்பலிறை வற்குமல தின்று
ளாதிபர னுக்குமெம ருக்குமம ராட
வேதுவிலை வந்தபடி யேதுமொழி கென்றான். (௧௨௫)

நற்றொழில் புரிந்திடு நதிச்சடில நம்ப
னற்றமறு வானவர்க ளானவர்க டம்மைச்
செற்றமொடு நீவிர்சிறை செய்ததை யுணர்ந்தே
மற்றெமை விடுத்தனனும் வன்மைவிறல் சிந்த. (௧௨௬)

என்றுபல வேலவ னிசைத்தமொழி கேளாக்
குன்றுறழு மொய்ம்புள கொடுந்தகுவர் மன்னன்
வன்றனு வளைப்பவுமை மைந்தனும் வளைத்தான்
றுன்றிரு வருங்கணை சொரிந்தமர் புரிந்தார். (௧௨௭)

கையன்விடு வெங்கணைகள் கந்தனெதிர் சிந்துந்
துய்யன்விடு வெங்கணைகள் சூர்துணை யகற்றும்
வையமிசை யோர்வெருவ வையுமிசை நின்றே
வெய்யசம ரிவ்வகை விளைத்தனர் வெகுண்டே. (௧௨௮)

இந்தவகை விற்சம ரியற்றுமது போதிற்
கந்தன புயங்களுள கந்தன்முரு கேசன்
வெந்திறல்கொ டாரகன் விடுங்கணை விலக்கிச்
சிந்தினனொர் கோடிகணை தீயன்மிசை செல்ல. (௧௨௯)

கோடிகணை பட்டுழி கொதித்ததி னிரட்டி
நீடுகணை விட்டிடலு நேசமுரு கேச
னுடிமிகு கோல்சிதறி நண்ணலன் விடுப்பக்
கூடிவரு வாளிகள் குறைத்தன னறுத்தே. (௧௩௦)

கன்னியிட நண்ணுமிறை கண்ணில்வரு மண்ணல்
பின்னரு மிலங்கிரு பெருங்கணை துரந்தே

யின்னல்புரி சூரனிளை யானுடல் விளைப்பக்
கொன்னுறு முகக்கையொடு கோடுக ளறுத்தான். (௧௩௧)

சந்துறு முகக்கைநெடி தானதன தந்தஞ்
சிந்தலு மனத்திடை சினத்தவுணர் செம்மல்
வெந்திறல்கொ ளாயிரம் விறற்கணை விடுத்தே
கந்தனிர தத்துறு கவின்கொடி யறுத்தான். (௧௩௨)

அப்பொழுது வேலவ னருங்கணைக ளெட்டு
மெய்ப்புற விடுத்தவுணன் விற்றனை யொடித்துத்
துப்புடைய வாயிர நெடுங்கணை துரந்தே
யொப்பிலவ னேறிரத மொல்லைதுகள் கண்டான். (௧௩௩)

தேரழிய வேறுமொரு தேரின்மிசை யேறி
வீரமுற மற்றுமொரு விற்றனை யெடுத்தே
சீரிய குகன்றனது தேர்கடவு கான்மே
லாரும்வகை யாயிர மடற்கணை விடுத்தான். (௧௩௪)

மன்னுகணை மேனிபட மாருதம் வருந்த
வன்னது தெரிந்துகுக னாயிர நெடுங்கோல்
கொன்னவுணர் மன்னது குளத்தினு ளழுத்தப்
பொன்னினிர தத்திடை புலம்பினன் விழுந்தான். (௧௩௫)

சோரியொடு சோபமொடு சூரிளவல் வீழ
வீரமுற வன்படைஞர் வேலனை வளைந்தே
போரது புரிந்தழி பொலிந்தகணை தூவிச்
சீரிய குகன்றகுவர் சேனைக ளறுத்தான். (௧௩௬)

மையல தொழிந்திட வெழுந்தவுணர் மன்னன்
செய்யமுரு கன்புடை சிவன்படை செலுத்தக்
கைகொடு பிடிப்பவது கண்டுபல மாயை
வெய்யமலை யோடுசெய வேலினை விடுத்தான். (௧௩௭)

வென்றிபுனை யெஃகமது விஞ்சைதரு குன்றை
வன்றிறல்கொ டாரகனை வல்லையி லழித்தே
யொன்றுதிறல் வீரரை யெழுப்பியுயர் கங்கை
சென்றதனி லாடிபு திரும்பியதை யன்றே. (௧௩௯)

வெந்திறல்கொள் வேலது விசாகனது கைமேல்
வந்தினி திருப்பவடல் வாகுமுதல் வீர
ரெந்தையெதிர் வந்திட விலங்குமுரு கேசன்
புந்திகள் களிப்பவ வருக்கருள் புரிந்தான். (௧௩௧)

மற்றதுபி னுந்துதிறல் வாகுவை விளித்தே
வெற்றியொடு தாரகன் விடுத்துழி பிடித்த
வற்றமில ரன்படைய வன்கையி லளித்தான்
றற்றுமிகு தானவர்க டங்கள்குல காலன். (௧௪௦)

இறந்தமிகு பூதர்க ளியாரையு மெழுப்பி
நிறைந்தபடை சூழ்தர நிவந்திடு கவந்தப்
பறந்தலை கடந்தடல்கொள் பன்னிரு புயத்தோன்
சிறந்தவிம யக்கிரியி னெல்லையீது நீர்ந்தான். (௧௪௧)

தென்றிசையி னேகியுயர் தேவகிரி நண்ண
வன்றிறல்கொ ளாதவன் மறைந்தனனவ் வேலைக்
குன்றுதலி லாவனைய குன்றின்மிசை வென்றிப்
பொன்றிகழு மெஃகமுள புங்கவ னிருந்தான். (௧௪௨)

ஆசிலருள் வேலவனை யவ்வரையின் விண்ணோ
பூசனை புரிந்தனர் புகன்றவிது நிற்க
வீசுபுக ழும்பன்முகன் வீடியது கேளா
மாசவுரி யென்னுமனை மாதுதுய ருற்றாள். (௧௪௩)

மையுறு தடங்கண்மட மங்கையரொ டேகிச்
செய்யதொரு மின்னனைய செல்வமெனு மாயப்

பொய்யினில் விழுந்துபல புன்மைகள் புரிந்தோன்
மெய்யினில் விழுந்தலறி மெத்துதுய ருற்றான். (௧௪௪)

அந்தவமை யத்தின்முனை மாசுர மடைந்த
சுந்தர மிகுந்தவ சுரேந்திரன் விறைவி
வந்துதன தத்தன்மடி வானசெயல் கண்டு
வெந்துயர் பொருந்திட விழுந்தலறி னாள். (௧௪௫)

அங்குள கடன்செய்தவ னைத்தகன மாற்றித்
திங்கண்முக வன்னையர்கள் யாருமெரி சேரப்
பொங்குதுயர் கொண்டுசில போரவுண ரோடு
மங்கலக றன்கடன் மகேந்திர மடைந்தான். (௧௪௬)

அங்ககரி லுள்ளவ ரருந்துயர் பொருந்தக்
கொன்னுடைய சூரனுறு கோயிலவை யுற்று
மன்னவ னடித்துணையின் வல்லையின் விழுந்தே
யின்னலொ டரற்றின னிகழ்ந்தன விசைத்தான். (௧௪௭)

தம்பிமடி வானமொழி தன்செவியி லேற
வெம்பின னரித்தவிசின் மீமிசை யிருந்தோ
னம்புவி விழுந்தன னரற்றின னதற்பின்
மொய்ம்புடைய வேலனொ டமர்க்கெழ முயன்றான். (௧௪௮)

அன்னசெயல் கண்டன னமைச்சரில மோகன்
முன்னுற வடைந்துசில புந்திகண் மொழிந்தே
மன்னவ னமர்க்கெழன் மறுத்திட விருந்தே
யின்னல்புரி சூரனவ னின்னதை யியற்றும். (௧௪௯)

மற்றிணையில் வேலவன் மருங்கினி னெருங்கும்
வெற்றியுறு சேனையை விறைவிவரு மாறங்
கொற்றரை விடுத்துவிட மொத்தவ னிருந்தான்
கொற்றமுரு கேசனது கொள்கையுரை செய்வாம். (௧௫௦)

தேரினொடு வாரிமிசை செங்கதி ரருக்க
னேரினெ டெழுந்தன னெழுந்தவது மானச்
சாரதர் குலாவவரு சையகிகர் வையம்
வீரநெடு வேலுள விசாகனினி துற்றான். (௧௩௧)

மாருத வலவன்விடு வையமிசை மேவிச்
சீரிலகு வானவர் செழுங்கிரி யகன்றே
வீரமுறு சேனையுடை மேவுற விறந்தே
தாரகிரி கண்டது தணந்தருளி னானால. (௧௩௨)

கருக்கடல் கடப்பவருள் காசிநகர் கண்டு
பருப்பத மெனும்பெயர் பரித்தகிரி கண்டு
விருப்பமுள வேங்கட வியனகுவடு கண்டு
மருக்குலவு தென்கயிலை வண்சிகரி கண்டு. (௧௩௩)

ஆலவன மாகிய வரும்பதி தெரிந்து
ஞாலமுயர் கச்சியெனு நன்னகர் தெரிந்து
சீலமுற முற்கிரி தெரிந்துநவ் ரீதக்
கோலநக ரோடுமுது குன்றது தெரிந்து. (௧௩௪)

வலவிய மிடற்பதன் மகிப்பணி துதிப்பப்
பல்லிய முழங்கவுமை பார்வைகளி கூர
வல்லவனை கண்டமுள வண்ணனட மாடுஞ்
செல்லுறு பொழிற்குலவு தில்லைநகர் கண்டு. (௧௩௫)

சீரினொடு மன்னிவளர் சென்னிவள நாட்டு
வாரிநிகர் காவிரி வடாதுதிசை தன்னி
லேரிலகு மண்ணிநதி யின்கரை யடைந்தான்
காரிலகு கண்டனது கண்ணில்வரு மண்ணல். (௧௩௬)

அந்தவமை யந்தனி லருக்கன்மறை வானான்
கந்தனது போதமரர் கம்மியனை நோக்கி

யிநதவிடை யொன்றுநக ரின்றுபுரி கென்று
னூந்துமவ னப்பொழுதி லோர்நகர் புரிந்தான். (கருஎ)

தாரணியி னப்பதி தனக்கமரர் சேய்ஞ
லூரென வரும்பெய ருரைத்தன ரதன்க
ணாருமெழில் வேலவ னமர்ந்தினி திருந்தான்
சீருலகு விண்ணிறை செயற்கையை யிசைப்பாம். (கருஅ)

முன்னமொரு வைகலின் முரட்குலிச வேலோ
னின்னலொடு காழியி னிருந்தபொழு தங்கண்
மன்னுமொரு தெய்வத மருங்கணிகள் வைத்தா
னன்னது கலன்களை யளித்ததவண் வந்தே. (கருகூ)

அண்டர்புகழ் தெய்வத மளித்தவணி தன்னிற்
கொண்டலி னிருண்டிடு குழற்சசி யிடும்பூண்
கண்டவளை யுன்னிமிகு காமமெனும் வெந்நோய்
கொண்டவன் வருந்தியது கூறவரி தம்மா. (கசூ0)

ஆயதொரு வேலைதனி லாதவ னெழுந்தான்
றாயமுரு கக்கடவுள் சோதிவழி வங்க
ணேயமொடு செய்துமிகு பூசனை நிரப்பி
நாயக னளிப்பவொரு நற்படை படைத்தான். (கசூக)

வெற்றியணி கஞ்சலவ வீறிரத மேறி
மற்றிணையி லாதவிடை மாமருது மேன்மை
யுற்றமயி லாடுதுறை யொண்பறிய லூர்கண்
டற்றமில் வளங்கொள்கம லாலய மடைந்தான். (கசூஉ)

அந்தமில் வளங்குலவு மப்பதி தணந்தே
வெந்துயர் தருங்கொடிய பாலைதனின் மேவத்
தந்திமுக வற்கிளவல் சாருதலு மன்ன
செந்தழல் வனங்குளிர்மை சேர்ந்தது சிறந்தே. (கசூ௩)

